التاميلية
தமிழ்

مترجم لعدة لغات

# صحيح الدعاء والثناء على الله تعالى

# சரியான துஆக்களும், அல்லாஹ்வைப் புகழ்தலும்

கலாநிதி. அப்துல்லாஹ் இப்னு ஹமூத் அல்ஃபுரைஹ்


துஆவுக்கான ஒழுங்குமுறைகள்


அல்லாஹ்வை புகழ்வதற்கான வார்த்தைகள்


அல்குர்ஆனிய துஆக்கள்


தொழுகையில் ஓத வேண்டிய துஆக்கள்


நபியவர்கள் ஓதிய துஆக்கள்


நபியவர்கள் பாதுகாப்பு தேடிய துஆக்கள்


ஓதிப்பார்க்கும் துஆக்கள்


காலை மாலை துஆக்கள்

د. عبدالله بن حمود الفريح



குறிப்பிட்ட துஆக்களுக்கு செல்வதற்கு ஒவ்வொரு தலைப்பின் மீதும் அழுத்துக



doa.eqtidaa.com

# முன்னுரை

அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும் உரித்தானது. அவனின் கருணையும், ஈடேற்றமும் அவனது தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவரின் குடும்பத்தார்கள், தோழர்கள் என அனைவர் மீதும் உண்டாவதாக! இது சுருக்கமான துஆக்களை உள்ளடக்கிய ஓர் சிறிய நூலாகும். (இதில் அல்லாஹ்வைப் புகழ்தல், அல்குர்ஆனிய துஆக்கள், நபி (ஸல்) அவர்கள் ஓதிய துஆக்கள், நபி (ஸல்) அவர்கள் பாதுகாப்பு தேட பயன்படுத்திய

துஆக்கள், ஓதிப்பார்க்க பயன்படும் துஆக்கள், காலை மாலை துஆக்கள் போன்றன உள்ளடங்கியுள்ளன). அவ்வாறே இதில் துஆ கேட்பதன் ஒழுங்கு முறைகளும் உள்ளடங்கியுள்ளன. அதிக நலவுகளை ஓர் முஸ்லிம் பெற்றிட வேண்டும் எனும் நோக்கில் அல்குர்ஆன், ஸுன்னாவிலிருந்து சரியான துஆக்களை மாத்திரம் தேர்வு செய்ய வேண்டுமென்பதில் அதிக கரிசனை காட்டியுள்ளேன். அனைத்து துஆக்களையும் அரபியிலும், தமிழில் அதன் அர்தத்தங்களையும், அதன் சரியான உச்சரிப்பு முறைகளையும் எழுதியுள்ளேன். இந் நூலின்

இறுதியில் துஆக்கள் இடம்பெற்ற ஹதீஸ்களின் தன்மைகள் பற்றியும் குறிப்பிட்டுள்ளேன்.

இப்பாரியசேவைஅல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை பெற்றுத் தரவேண்டும் என அவனிடமே வேண்டிக் கொள்கிறேன். எம் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் குடும்பத்தார்கள், தோழர்கள் என அனைவர் மீதும் அல்லாஹ்வின் கருணையும், ஈடேற்றமும் என்றென்றும் உண்டாவதாக!

**கலாநிதி அப்துல்லாஹ் இப்னு ஹமூத் அல்ஃபுரைஹ்**





# துஆக்களுக்கு செல்வதற்கு முன்



முஸ்லிமே! உன் இறைவன் உன்னை விட்டும் தேவையற்றவன்... நீ தான் அவனிடம் தேவையுடையவன்... உனக்காகவே இத் துஆக் கோர்வை... இதைக் கொண்டு உன் உள்ளத்தை தயார்படுத்திடு...

ஒவ்வொரு நலவுக்கும் தேவையான சுருக்கமான துஆக்களே இவை.

அவற்றில் இயலுமானவைகளை

மனனமிட்டுக்கொள்.

இவற்றில் எத்தனையோ துஆக்கள் உன் ஒவ்வொரு தேவைக்கும் போதுமானதாக உள்ளன.

ஏனெனில் இவை குறைவான சொற்களைக் கொண்ட, பாரிய அர்த்தத்தைத் தரக் கூடிய துஆக்கள்.

அவற்றை ஓதும் போது மனதை ஒரு முகத்துடன் இருத்தி, இறைவனுக்கு அடிபணிந்து ஓதிடு.

# துஆ கேட்பதன் ஒழுங்குகள்

*01,* துஆவை அல்லாஹ்விடம் மாத்திரமே கேட்க வேண்டும். அல்லாஹ் ஒருவன், தான் கேட்கும் துஆவை அவனால் மாத்திரமே நிவர்த்தி செய்ய முடியும் எனவும், நபிமார்கள், அவ்லியாக்கள், மலக்குகள், நல்லடியார்கள் போன்ற எவரிடமும் துஆ கேட்கக் கூடாது என்பதையும் உளப்பூர்வமாக அறிந்திருக்க வேண்டும். அல்லாஹ் கூறுகிறான்,

﴿فَٱدۡعُواْ ٱللَّهَ مُخۡلِصِينَ لَهُ ٱلدِّينَ﴾ [غافر:١٤]

“அந்தரங்க சுத்தியுடனும்,

சன்மார்க்கத்தில் வழிப்பட்டவர்களாகவும் அல்லாஹ்வை பிரார்த்தியுங்கள்'' *(அல்குர்ஆன் 40:14).*

*02.* துஆவின் போது இது அல்லாஹ் விரும்புகின்ற மாபெரும் வணக்கம் எனவும், அதற்கான பதில் அவசியம் கிடைக்கபெறும் எனவும் உறுதியாக மனதில் கொள்ள வேண்டும்.

*03.* உமது பிரார்த்தனையை ஏற்பதற்கு அல்லாஹ் மாத்திரமே சக்தி பெற்றவன் எனவும், அல்லாஹ்விடம் நெருங்குவதற்காக அவனின்

படைப்பினங்களிடம் உதவி கேட்டு, மார்க்கம் அனுமதிக்காத முறைகளை சில முஸ்லிம்கள் செய்வதைப் போல் செய்யக்கூடாது எனவும் உறுதியாக நம்பிக்கை கொள்ள வேண்டும்.

04. நீ பாவத்திலிருந்து எவ்வளவு தூரமாக இருந்தாலும் நீ பாவமன்னிப்பு கேட்பதைக் கண்டு, உனக்காக அவற்றை ஏற்றுக்கொள்வதில் அல்லாஹ் சந்தோசமடைகிறான் என்பதை மனதில் நிறுத்திக் கொள். பிரார்த்தனைக்கான பிரதிபலன் கிடைக்காமல் போகிறதே என

அவனின் அருட்கொடைகளில் நிராசையடைவதை விட்டும் விலகியிரு. உன் பாவமன்னிப்பைக் கண்டு, அதை நிறைவேற்றுவதில் அவன் அளப்பரிய சந்தோசமடைகிறான் என்பதை மாத்திரம் மனதில் இருத்திக் கொள் -அல்லாஹ் அனைத்தை விட்டும் தேவையற்றவன்- பின்வரும் அல்லாஹ்வின் கூற்றுக்களைக் கவனி. அல்லாஹ் கூறுகிறான்,

﴿إِنَّ ٱللَّهَ يَغۡفِرُ ٱلذُّنُوبَ جَمِيعًاۚ﴾ [زمر: ٥٣]

“அல்லாஹ் அனைத்துப் பாவங்களையும் மன்னிக்கிறான்” (அல்குர்ஆன் 39:53),

﴿وَإِذَا سَأَلَكَ عِبَادِى عَنِّى فَإِنِّى قَرِيبٌ أُجِيبُ دَعْوَةَ ٱلدَّاعِ إِذَا دَعَانِ﴾ [بقره: ١٨٦]

*“(நபியே!) என் அடியார்கள் என்னைப்பற்றி உம்மிடம் கேட்டால்; “நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கிறேன், பிரார்த்தனை செய்பவரின் பிரார்த்தனைக்கு அவர் பிரார்த்தித்தால் விடையளிக்கிறேன்; அவர்கள் என்னிடமே (பிரார்த்தித்துக்) கேட்கட்டும்; என்னையே நம்பட்டும். அப்பொழுது அவர்கள் நேர்வழியை அடைவார்கள்” என்று கூறுவீராக.” (அல்குர்ஆன் 02:186)*

*05. உன் உணவு, குடிபானம் போன்றவை இஸ்லாத்தில் தடுக்கப்பட்ட முறைகளில் பெறப்பட்டதாக இருக்கக் கூடாது. அது உன் பிரார்த்தனை அங்கீகரிக்கப்படுவதை தடுக்கும் காரணிகளாகும். நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்,*

«الرَّجُلَ يُطِيلُ السَّفَرَ أَشْعَثَ أَغْبَرَ، يَمُدُّ يَدَيْهِ إِلَى السَّمَاءِ، يَا رَبِّ، يَا رَبِّ، وَمَطْعَمُهُ حَرَامٌ، وَمَشْرَبُهُ حَرَامٌ، وَمَلْبَسُهُ حَرَامٌ، وَغُذِيَ بِالْحَرَامِ، فَأَنَّى يُسْتَجَابُ لِذَلِكَ؟»:

*“அவர் தலைவிரி கோலத்துடனும் புழுதி படிந்த*

நிலையிலும் நீண்ட பயணம் மேற்கொள்கிறார். அவர் தம் கரங்களை வானை நோக்கி உயர்த்தி "என் இறைவா, என் இறைவா" என்று பிரார்த்திக்கிறார். ஆனால், அவர் உண்ணும் உணவு தடைசெய்யப்பட்டதாக இருக்கிறது. அவர் அருந்தும் பானம் தடைசெய்யப்பட்டதாக இருக்கிறது. அவர் அணியும் உடை தடை செய்யப்பட்டதாக இருக்கிறது. தடை செய்யப்பட்ட உணவையே அவர் உட்கொண்டிருக்கிறார். இத்தகையவருக்கு எவ்வாறு (அவரது பிரார்த்தனை) ஏற்கப்படும்?” (முஸ்லிம் 1015)

06. துஆ கேட்கும் போது பின்வரும் வழிமுறைகளைக் கையாள வேண்டும்.

 சுத்தமான நிலையில் துஆ கேட்க வேண்டும். அதற்காக தொழுகைக்கு வுழூ செய்வதைப் போல் செய்து கொள்ள வேண்டும். ஒரு முறை அபூ ஆமிர் (ரழி) அவர்கள் அபூமூஸா (ரழி) அவர்களிடம் தனக்காக பிரார்த்திக்குமாறு நபியவர்களிடம் கூறுமாறு கூறினார். அபூ மூஸா (ரழி) அவர்களும் இதை நபியவர்களிடம் கூற, நபியவர்களோ தண்ணீர்

கொண்டுவரும்படி கூறி, அதில் அங்கத் தூய்மை (வுழூ) செய்தார்கள். பிறகு தம் இரு கரங்களையும் உயர்த்தி,

«اللَّهُمَّ اغْفِرْ لِعُبَيْدٍ، أَبِي عَامِرٍ»

“இறைவா! அபூஆமிர் உபைதுக்கு நீ மன்னிப்பு அளிப்பாயாக! மறுமை நாளில் உன் படைப்பினமான மனிதர்களில் பலரையும்விட (தகுதியில்) உயர்ந்தவராக அவரை ஆக்குவாயாக!” என்று பிரார்த்தித்தார்கள். அப்போது அவர்களின் அக்குள்கள் இரண்டின் வெண்மையையும் தென்பட்டது. உடனே அபூமூஸா அவர்களும்,

“எனக்காகவும் பாவமன்னிப்புக் கோருங்கள் (நபியே!)” என்று கூறினார்கள். அதற்கு அவர்கள்,

«اللَّهُمَّ اجْعَلْهُ يَوْمَ الْقِيَامَةِ فَوْقَ كَثِيرٍ مِنْ خَلْقِكَ، أَوْ مِنَ النَّاسِ»:

“இறைவா! அப்துல்லாஹ் பின் கைஸின் பாவத்தை மன்னித்து, மறுமை நாளில் கண்ணியம் நிறைந்த இருப்பிடத்திற்கு அவரை அனுப்புவாயாக” என்று பிரார்த்தித்தார்கள். *(புஹாரி 4323, முஸ்லிம் 2498)*

2. கிப்லாவை முன்னோக்க வேண்டும்.

3. இரு கைகளையும் உயர்த்த வேண்டும்.

மேற்கூறப்பட்ட இரு முறைகளையும் பின்வரும் ஹதீஸ் விளக்குகிறது. உமர் பின் அல்கத்தாப் (ரழி) அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பத்ருப் போர் நாளில் (எதிரிகளான) இணை வைப்பாளர்கள் (எண்ணிக்கை) ஆயிரம் பேராக இருப்பதையும், (முஸ்லிம்களான) தம் தோழர்கள் முன்னூற்றுப் பத்தொன்பது பேராக இருப்பதையும் கண்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (தொழுகையின்

*திசையான) "கிப்லா"வை முன்னோக்கித் தம் கரங்களை நீட்டித் தம் இறைவனை உரத்த குரலில் (அழைத்துப்) பிராத்தித்தார்கள்.*

«اللَّهُمَّ أَنْجِزْ لِي مَا وَعَدْتَنِي، اللَّهُمَّ آتِ مَا وَعَدْتَنِي»:

*"இறைவா! எனக்கு நீ அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவாயாக. இறைவா! எனக்கு அளித்த வாக்குறுதியை வழங்குவாயாக....." என்று தம் கரங்களை நீட்டி, கிப்லாவை முன்னோக்கி இறைவனிடம் பிரார்த்தித்துக்கொண்டேயிருந்தார்கள். (முஸ்லிம் 1763)*

 துஆவின் போது அல்லாஹ்வைப் புகழ்ந்து, நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்துக் கூற வேண்டும்.

ஃபளாலா பின் உபைத் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்,

ஒரு மனிதர் தனது தொழுகையில் அல்லாஹ்வை (புகழ்ந்து) கண்ணியப்படுத்தாமலும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்துச் சொல்லாமலும் பிரார்த்தனை செய்ததை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செவியுற்றார்கள். இவர்

அவசரப்பட்டு விட்டார் என்று கூறி அம்மனிதரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அழைத்தார்கள்.

«إِذَا صَلَّى أَحَدُكُمْ، فَلْيَبْدَأْ بِتَمْجِيدِ رَبِّهِ جَلَّ وَعَزَّ، وَالثَّنَاءِ عَلَيْهِ، ثُمَّ يُصَلِّي عَلَى النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ، ثُمَّ يَدْعُو بَعْدُ بِمَا شَاءَ»:

உங்களில் ஒருவர் தொழுதால் முதலில் தனது இறைவனை அவர் புகழ்ந்து கண்ணியப்படுத்தட்டும். பிறகு நபியின் மீது ஸலவாத்துச் சொல்லட்டும். இதற்குப் பிறகு அவர் விரும்பியதை வேண்டலாம் என்று கூறினார்கள். (திர்மிதி 3477, அபூதாவுத் 1481).





இதன் போது சில சூராக்களின் ஆரம்பத்தில் இடம்பெற்றுள்ளவாறு அல்லாஹ்வைப் புகழ்ந்தாலும் போதுமானது. அவ்வாறே நபி (ஸல்) அவர்களையும் புகழ்ந்து, அவர் மீது ஸலவாத்தும் கூற வேண்டும். இதுவே துஆ அங்கீகரிக்கப்படுவதற்கான ஏற்றமான முறையாகும். இது பற்றிய விபரம் பின்னே இடம்பெறும்.

5 துஆ கேட்கும் போது அல்லாஹ்வின் மீது நல்லெண்ணம் வைத்தும், அவன் துஆவை

அங்கீகரிப்பான் எனும் எண்ணத்திலும் கேட்க வேண்டும். துஆ விரைவாக அங்கீகரிக்கப்பட வேண்டும் என்பதில் குறியாய் இருக்கக் கூடாது. அதை அல்லாஹ் எப்படியும் அங்கீகரிப்பான் என்ற நம்பிக்கையில் இருக்க வேண்டும்.

அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள், நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்,

«لَا يَزَالُ يُسْتَجَابُ لِلْعَبْدِ، مَا لَمْ يَدْعُ بِإِثْمٍ أَوْ قَطِيعَةِ رَحِمٍ، مَا لَمْ يَسْتَعْجِلْ»:

“ஓர் அடியார் பாவமானதையோ அல்லது உறவைத்

துண்டிப்பதையோ வேண்டிப் பிரார்த்திக்காத வரையிலும் அவசரப்படாத வரையிலும் அவரது பிரார்த்தனை ஏற்கப்பட்டுக் கொண்டேயிருக்கிறது". அப்போது, "அல்லாஹ்வின் தூதரே! "அவசரப்படுதல்" என்றால் என்ன?" என்று கேட்கப்பட்டது. அதற்கு,

«يَقُولُ قَدْ دَعَوْتُ وَقَدْ دَعَوْتُ، فَلَمْ أَرَ يَسْتَجِيبُ لِي، فَيَسْتَحْسِرُ عِنْدَ ذَلِكَ وَيَدَعُ الدُّعَاءَ»:

"ஒருவர் நான் பிரார்த்தித்தேன். (மீண்டும்) பிரார்த்தித்தேன். ஆனால், அவன் என் பிரார்த்தனையை ஏற்பதாகத்

தெரியவில்லை" என்று கூறி, சலிப்படைந்து பிரார்த்திப்பதைக் கைவிட்டுவிடுவதாகும்" என்று பதிலளித்தார்கள்.'' (முஸ்லிம் 2735)

 அல்லாஹ்வின் அழகிய பெயர்களைக் கொண்டு அவனிடம் துஆ கேட்க வேண்டும். அல்லாஹ்விடம் விஸ்தீரனத்தைக் கேட்டால், “வீஸ்தீரனத்தை அளிப்பவனே'' எனவும், அருளைக் கேட்டால், “அருளாலனே, அன்புடையோனே'' எனவும், கௌரவத்தைக் கேட்டால், “கண்ணியமானவனே'' எனவும், பாவமன்னிப்பைக்

கேட்டால், "மன்னிப்பளிப்பவனே" எனவும், நோய் நிவாரணம் கேட்டால், "நோய்களைக் குணப்படுத்துபவனே" எனவும் சந்தர்ப்பத்திற்குத் தகுந்த பெயர்களைப் பயன்படுத்தி அவனிடம் துஆ கேட்க வேண்டும். அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَلِلَّهِ ٱلۡأَسۡمَآءُ ٱلۡحُسۡنَىٰ فَٱدۡعُوهُ بِهَاۖ﴾ [الأعراف:١٨٠]

"அல்லாஹ்வுக்கு அழகிய திருநாமங்கள் இருக்கின்றன. அவற்றைக் கொண்டே நீங்கள் அவனைப் பிரார்த்தியுங்கள்" (அல்குர்ஆன் 07:180)

 7 துஆவின் போது அல்லாஹ்விடம் கேட்கும் தேவைகளை திரும்பத் திரும்ப கேட்க வேண்டும். இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் பத்ருப் போரில் நபியவர்களின் துஆவைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

«اللَّهُمَّ أَنْجِزْ لِي مَا وَعَدْتَنِي، اللَّهُمَّ آتِ مَا وَعَدْتَنِي»:

"இறைவா! எனக்கு நீ அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவாயாக. இறைவா! எனக்கு அளித்த வாக்குறுதியை வழங்குவாயாக...!" என நபியவர்கள் கூறிய பின் அவர்களுடைய தோள்களிலிருந்து

அவர்களின் மேல்துண்டு நழுவி கீழே விழுந்துவிட்டது.

அப்போது அவர்களிடம் அபூபக்ர் (ரழி) அவர்கள் வந்து, அத்துண்டை எடுத்து அவர்களின் தோள்கள்மீது போட்டுவிட்டு, பின்னாலிருந்து அவர்களைக் கட்டியணைத்துக்கொண்டு, "அல்லாஹ்வின் தூதரே! உங்கள் இறைவனிடம் வேண்டியது போதும். அவன் உங்களுக்கு அளித்த வாக்குறுதியை நிச்சயம் நிறைவேற்றுவான்" என்று கூறினார்கள். (முஸ்லிம் 1763).

அவ்வாறே அபூஹுரைரா (ரழி)

அவர்கள் குறிப்பிடுகிறார்கள், நபி (ஸல்) அவர்கள்,

«اللَّهُمَّ اهْدِ دَوْساً وائْتِ بهم، اللَّهُمَّ اهْدِ دَوْساً وائت بهم»:

“இறைவா! தவ்ஸ் குலத்தாரை நேர்வழியில் செலுத்துவாயாக! அவர்களை (எம்மிடம்) கொண்டுவந்துவிடுவாயாக! இறைவா! தவ்ஸ் குலத்தாரை நேர்வழியில் செலுத்துவாயாக! அவர்களை (எம்மிடம்) கொண்டுவந்துவிடுவாயாக” என்று தவ்ஸ் குலத்தாருக்கு (நல்வழி வேண்டிப்) பிரார்த்தித்தார்கள். (புஹாரி 2937, முஸ்லிம் 2524).

 துஆவை சப்தமில்லாமல் அமைதியாக கேட்க வேண்டும். அல்லாஹ் கூறுகிறான்,

﴿ٱدۡعُواْ رَبَّكُمۡ تَضَرُّعٗا وَخُفۡيَةًۚ﴾ [الأعراف: ٥٥]

"(ஆகவே, முஃமின்களே!) உங்களுடைய இறைவனிடம் பணிவாகவும், அந்தரங்கமாகவும் பிரார்த்தனை செய்யுங்கள்" (அல்குர்ஆன் 07:55). துஆவை அமைதியாகக் கேட்பதானது மனத்தூய்மையை பறைசாற்றுகிறது. இதனாலே அல்லாஹ் ஸகரிய்யா அலை அவர்கள் துஆ கேட்ட விதத்தைப் பற்றி அல்குர்ஆனில் புகழ்ந்து கூறியுள்ளான். அல்லாஹ் கூறுகிறான்,

﴿إِذۡ نَادَىٰ رَبَّهُۥ نِدَآءً خَفِيًّا ٣﴾ [مريم: ٣]

*“(நபியே! இது) உம்முடைய இறைவன் தன் அடியாராகிய ஜகரிய்யாவுக்கு அருளிய (ரஹ்)மத்தைப் பற்றியதாகும். அவர் தம் இறைவனிடம் தாழ்ந்த குரழில் பிரார்த்தித்த போது (இவ்வாறு (ரஹ்)மத்தை அருளினான்).” (அல்குர்ஆன் 17:03).* அவர் மனத்தூய்மையுடன் பிரார்த்தித்ததனாலே இவ்வாறு கிடைத்தது என அல்குர்ஆன் விளக்க அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

9 தான் கேட்கும் துஆவில் அல்லாஹ்வை அதிகமாக

புகழ வேண்டும். ஓர் அடியான் தன்னைப் புகழ்வதை அல்லாஹ் விரும்புகிறான். இது ஓர் வணக்கமாக இருக்காவிட்டால் அல்லாஹ் தன் அடியாரை விட்டும் தேவையற்றவனாகவே இருக்கிறான். நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்,

«وَلَا أَحَدٌ أَحَبَّ إِلَيْهِ الْمَدْحُ مِنَ اللهِ وَلِذَلِكَ مَدَحَ نَفْسَهُ»:

“தன்னைப் புகழ்வதைவிட அல்லாஹ்வுக்கு மிகவும்

பிரியமானது எதுவுமில்லை. ஆகவேதான், அவன் தன்னைத் தானே புகழ்ந்து கொண்டுள்ளான்" (புஹாரி 4637, முஸ்லிம் 2760).

 துஆ ஏற்றுக்கொள்ளப்படும் நேரங்கள் பற்றிய அறிவு இருப்பதோடு, அந்நேரத்திலே அல்லாஹ்விடம் துஆவும் கேட்க வேண்டும்.

அல்குர்ஆன், ஸுன்னா குறிப்பிடுகின்ற, துஆ ஏற்றுக்கொள்ளப்படும் நேரங்களில் சில வருமாறு:

(அதானுக்கும் இகாமத்துக்கும் இடையில் கேட்கும் துஆ, இரவின் மூன்றில்

இறுதிப்பகுதியில் கேட்கும் துஆ, ஜும்ஆ நாளில் ஒரு நேரத்தில் கேட்கும் துஆ, ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னாலும் கேட்கும் துஆ, ஸுஜூதில் கேட்கும் துஆ, மழை பொழியும் போது கேட்கும் துஆ, கண்ணெதிரே இல்லாத ஓர் முஸ்லிம் சகோதரருக்காக கேட்கும் துஆ, பெற்றோர்கள் பிள்ளைகளுக்காக கேட்கும் துஆ, பிரயாணியின் துஆ, அநீதமிழைக்கப்பட்டவரின் துஆ போன்றனவாகும்)



﴿ٱلۡحَمۡدُ لِلَّهِ رَبِّ ٱلۡعَٰلَمِينَ ٢ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ ٣ مَٰلِكِ يَوۡمِ ٱلدِّينِ ٤﴾

[الفاتحة: ٢-٤]

அனைத்து புகழும், அகிலங்கள் எல்லாவற்றையும் படைத்து வளர்த்துப் பரிபக்குவப்படுத்தும் (நாயனான) அல்லாஹ்வுக்கே ஆகும். (அவன்) அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்புடையோன். (அவனே நியாயத்) தீர்ப்பு நாளின் அதிபதி(யும் ஆவான்). (அல்குர்ஆன் 01:02,03).



﴿ٱلۡحَمۡدُ لِلَّهِ فَاطِرِ ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضِ جَاعِلِ ٱلۡمَلَٰٓئِكَةِ رُسُلًا أُوْلِيٓ أَجۡنِحَةٖ مَّثۡنَىٰ وَثُلَٰثَ وَرُبَٰعَۚ يَزِيدُ فِي ٱلۡخَلۡقِ مَا يَشَآءُۚ إِنَّ ٱللَّهَ عَلَىٰ كُلِّ شَيۡءٖ قَدِيرٞ ١﴾ [فاطر:١]

அல்ஹம்து லில்லாஹ் - எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே; வானங்களையும், பூமியையும் படைத்தவன்; இரண்டிரண்டும், மும்மூன்றும், நன்னான்கும் இறக்கை உள்ளவர்களாக மலக்குகளைத் தன் தூதை எடுத்துச் செல்வோராக ஆக்கினான்; தான் நாடியதைப் படைப்பிலே

மிகுதப்படுத்துவான்; நிச்சயமாக அல்லாஹ் அனைத்துப் பொருள்களின் மீதும் பேராற்றலுடையவன். *(அல்குர்ஆன் 35:01).*



﴿ٱلۡحَمۡدُ لِلَّهِ ٱلَّذِي خَلَقَ ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضَ وَجَعَلَ ٱلظُّلُمَٰتِ وَٱلنُّورَۖ﴾ [الأنعام:١]

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அவனே வானங்களையும், பூமியையும் படைத்தான்; இருள்களையும், ஒளியையும் அவனே உண்டாக்கினான்; அப்படியிருந்தும் நிராகரிப்பவர்கள் தம் இறைவனுக்கு(ப் பிற பொருட்களைச்) சமமாக்குகின்றனர். (அல்குர்ஆன் 06:01).



﴿ٱلْحَمْدُ لِلَّهِ ٱلَّذِى لَهُۥ مَا فِى ٱلسَّمَٰوَٰتِ وَمَا فِى ٱلْأَرْضِ وَلَهُ ٱلْحَمْدُ فِى ٱلْءَاخِرَةِ ۚ وَهُوَ ٱلْحَكِيمُ ٱلْخَبِيرُ ﴿١﴾﴾ [سبأ:١]

அல்ஹம்து லில்லாஹ் - புகழ் எல்லாம் அல்லாஹ்வுக்கே உரியது. வானங்களில் உள்ளவையும், பூமியில் உள்ளவையும் அவனுக்கே (உரியன); மறுமையில் புகழ் யாவும் அவனுக்கே. மேலும் அவன் ஞானம் மிக்கவன்; (யாவற்றையும்) நன்கறிபவன். (அல்குர்ஆன் 34:01)



«الْحَمْدُ لِلّٰهِ حَمْدًا كَثِيرًا طَيِّبًا مُبَارَكًا فِيهِ»

அல்ஹம்து லில்லாஹி ஹம்தன் கஸீரன் தய்யிபன் முபாரக்கன் ஃபீஹி

அதிகமான, தூய்மையான, வளமிக்க எல்லாப் புகழும் (நன்றியும்) அல்லாஹ்வுக்கே உரியது




«رَبَّنَا لَكَ الْحَمْدُ مِلْءُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ، وَمِلْءُ مَا شِئْتَ مِنْ شَيْءٍ بَعْدُ، أَهْلَ الثَّنَاءِ وَالْمَجْدِ، أَحَقُّ مَا قَالَ الْعَبْدُ، وَكُلُّنَا لَكَ عَبْدٌ: اللَّهُمَّ لَا مَانِعَ لِمَا أَعْطَيْتَ، وَلَا مُعْطِيَ لِمَا مَنَعْتَ، وَلَا يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ»

*ரப்பனா லகல் ஹம்து மில்உஸ் ஸமாவாதி வல் அர்ழி வமில்உ மாஷிஃத மின் ஷைஇன் பஃது, அஹ்லஸ்ஸனாஇ வல்மஜ்தி, அஹக்கு மா காலல் அப்து, வகுல்லுனா லக அப்துன், அல்லாஹும்ம லா மானிஅ லிமா*

அம்ஃலைத, வலா முஃதிஉ லிமா மனஃத, வலா யன்ஃபஉ தல் ஜத்தி மின்கல் ஜத்து.

வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப, அவ்விரண்டுக்கும் இடையில் உள்ளவை நிரம்ப, அதற்குப் பிறகு நீ எவ்வளவு நாடுகிறாயோ அவை நிரம்ப இறைவா! உனக்குப் புகழ் உண்டாகட்டும். புகழுக்கும் கண்ணியத்திற்கும் உரியவனே! (நீயே) அடியார்களின் புகழ்ச்சிக்கு மிகத் தகுதியானவன்! நாங்கள் அனைவரும் உனக்கே அடிமைகள்; அல்லாஹ்வே! நீ கொடுத்ததைத் தடுப்பவர் யாருமில்லை; நீ தடுத்ததைக்

கொடுப்பவர் யாருமில்லை; செல்வந்தரின் செல்வம் உன்னை விட்டு அவருக்கு எவ்விதப் பலனையும் அளிக்காது.



«اللَّهُمَّ لَكَ الْحَمْدُ كُلُّهُ، وَإِلَيْكَ يَرْجِعُ الْأَمْرُ كُلُّهُ»

அல்லாஹும்ம லகல் ஹம்து குல்லஹு, வஇலைக யர்ஜிஉல் அம்ரு குல்லஹு

இறைவா! உனக்கே அனைத்துப் புகழும் உரித்தானது. அனைத்து விடயங்களும் உன்னிடமே மீள இருக்கின்றன.



«اللَّهُمَّ رَبَّنَا لَكَ الحَمْدُ أَنْتَ قَيِّمُ السَّمَوَاتِ وَالأَرْضِ، وَلَكَ الحَمْدُ أَنْتَ رَبُّ السَّمَوَاتِ وَالأَرْضِ وَمَنْ فِيهِنَّ، وَلَكَ الحَمْدُ أَنْتَ نُورُ السَّمَوَاتِ وَالأَرْضِ وَمَنْ فِيهِنَّ، أَنْتَ الحَقُّ، وَقَوْلُكَ الحَقُّ، وَوَعْدُكَ الحَقُّ، وَلِقَاؤُكَ الحَقُّ، وَالجَنَّةُ حَقٌّ، وَالنَّارُ حَقٌّ، (وَالنَّبِيُّونَ حَقٌّ، وَمُحَمَّدٌ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ حَقٌّ) وَالسَّاعَةُ حَقٌّ، اللَّهُمَّ لَكَ أَسْلَمْتُ، وَبِكَ آمَنْتُ، وَعَلَيْكَ تَوَكَّلْتُ، (وَإِلَيْكَ أَنَبْتُ) وَإِلَيْكَ خَاصَمْتُ، وَبِكَ حَاكَمْتُ، فَاغْفِرْ لِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ، وَأَسْرَرْتُ وَأَعْلَنْتُ، وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي، (أَنْتَ المُقَدِّمُ، وَأَنْتَ المُؤَخِّرُ) لاَ إِلَهَ إِلَّا أَنْتَ»

அல்லாஹும்ம! ரப்பனா லகல் ஹம்து. அன்த்த கய்யிமுஸ் ஸமாவாத்தி, வல் அர்ழி. வலகல் ஹம்து அன்த ரப்புஸ் ஸமாவாதி வல் அர்ழி வமன் ஃபீஹின்ன வலகல் ஹம்து. அன்த்த நூருஸ் ஸமாவாத்தி வல்அர்ழி, வ மன் ஃபீஹின்ன. வலகல் ஹம்து.. அன்த்தல் ஹக்கு. வ கவ்லுகல் ஹக்கு வ வஅதுகல் ஹக்கு. வ லிகாஉக ஹக்கு.. வல்ஜன்னத்து ஹக்குன். வந்நாரு ஹக்குன். வந்நபிய்யூன ஹக்குன். வ முஹம்மதுன் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹக்குன். வஸ்ஸாஅத்து ஹக்குன்.

அல்லாஹும்ம! லக அஸ்லம்த்து, வ பிக ஆமன்த்து, வ அலைக தவக் கல்த்து, வ இலைக அனப்த்து, வ இலைக காஸம்த்து வ பிக ஹாகம்த்து. ஃபக்ஃபிர்லீ மா கத்தம்த்து, வ மா அக்கர்த்து, வ மா அஸ்ரர்த்து, வமா அஃலன்த்து. அன்த்தல் முகத்திமு, வ அன்த்தல் முஅக்கிரு. லா இலாஹ இல்லா அன்த்த.

இறைவா! எங்கள் அதிபதியே! உனக்கே புகழ் அனைத்தும். நீயே வானங்கள் மற்றும் பூமியின் நிர்வாகி ஆவாய். உனக்கே புகழ் அனைத்தும். நீயே வானங்கள், பூமி மற்றும் அவற்றில் உள்ளவர்களின்

இறைவன் ஆவாய். உனக்கே புகழ் அனைத்தும். நீயே வானங்கள், பூமி மற்றும் அவற்றில் உள்ளவர்களின் ஒளியும் ஆவாய். நீயே உண்மை. உன் சொல் உண்மை. உன் வாக்கு உண்மை. உன் சந்திப்பு உண்மை. சொர்க்கம் உண்மை. நரகம் உண்மை. (நபிமார்கள் உண்மை, முஹம்மத் (ஸல்) அவர்களும் உண்மையானவர்கள்), மறுமை நாள் உண்மை. இறைவா! உனக்கே நான் கீழ்ப்படிந்தேன். உன்மீதே நம்பிக்கை கொண்டேன். உன்னையே சார்ந்துள்ளேன். (உன்னிடமே என் வழக்குகளைக் கொண்டுவந்தேன்). உன்னிடமே

நீதி கேட்பேன். ஆகவே, நான் முந்திச் செய்த, பிந்திச் செய்கின்ற, இரகசியமாகச் செய்த, பகிரங்கமாகச் செய்த பாவங்களையும், என்னைவிட எதை நீ நன்கு அறிந்துள்ளாயோ அதையும் மன்னித்தருள்வாயாக. நீயே முற்படுத்துபவன். நீயே பிற்படுத்துபவன். உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை.



﴿ٱللَّهُمَّ مَٰلِكَ ٱلۡمُلۡكِ تُؤۡتِي ٱلۡمُلۡكَ مَن تَشَآءُ
وَتَنزِعُ ٱلۡمُلۡكَ مِمَّن تَشَآءُ وَتُعِزُّ مَن تَشَآءُ
وَتُذِلُّ مَن تَشَآءُۖ بِيَدِكَ ٱلۡخَيۡرُۖ إِنَّكَ عَلَىٰ كُلِّ
شَيۡءٖ قَدِيرٞ ٢٦ تُولِجُ ٱلَّيۡلَ فِي ٱلنَّهَارِ وَتُولِجُ
ٱلنَّهَارَ فِي ٱلَّيۡلِۖ وَتُخۡرِجُ ٱلۡحَيَّ مِنَ ٱلۡمَيِّتِ
وَتُخۡرِجُ ٱلۡمَيِّتَ مِنَ ٱلۡحَيِّۖ وَتَرۡزُقُ مَن تَشَآءُ
بِغَيۡرِ حِسَابٖ ٢٧﴾ [آل عمران: ٢٦-٢٧]

“அல்லாஹ்வே! ஆட்சிகளுக்கெல்லாம் அதிபதியே! நீ யாரை விரும்புகிறாயோ அவருக்கு

ஆட்சியைக் கொடுக்கின்றாய்; இன்னும் ஆட்சியை நீ விரும்புவோரிடமிருந்து அகற்றியும் விடுகிறாய்; நீ நாடியோரை கண்ணியப்படுத்துகிறாய்; நீ நாடியவரை இழிவு படுத்தவும் செய்கிறாய்; நன்மைகள் யாவும் உன் கைவசமேயுள்ளன அனைத்துப் பொருட்கள் மீதும் நிச்சயமாக நீ ஆற்றலுடையவனாக இருக்கின்றாய்.''

(நாயனே!) நீதான் இரவைப் பகலில் புகுத்துகின்றாய்; நீதான் பகலை இரவிலும் புகுத்துகின்றாய்; மரித்ததிலிருந்து உயிருள்ளதை

நீயே வெளியாக்குகின்றாய்; நீயே உயிருள்ளதிலிருந்து மரித்ததையும் வெளியாக்குகின்றாய்; மேலும், நீ நாடியோருக்குக் கணக்கின்றிக் கொடுக்கின்றாய். *(அல்குர்ஆன் 03:26, 27).*

மேற்கூறப்பட்ட இரண்டு வசனங்களும் அல்குர்ஆனில் உள்ள சூறா ஆலுஇம்ரானில் இடம்பெற்ற 26, 27 ஆகிய வசனங்களாகும். அதன் ஆரம்பத்தில் இடம்பெறும், “நபியே நீர் கூறுவீராக” எனும் சொல் துஆவை குறிப்பிட வேண்டும் என்பதற்காய் நீக்கப்பட்டுள்ளது.


## அல்லாஹ்வை புகழும் சில முறைகள்





«اللَّهُمَّ رَبَّ السَّمَوَاتِ وَرَبَّ الْأَرْضِ وَرَبَّ الْعَرْشِ الْعَظِيمِ، رَبَّنَا وَرَبَّ كُلِّ شَيْءٍ، فَالِقَ الْحَبِّ وَالنَّوَى، وَمُنْزِلَ التَّوْرَاةِ وَالْإِنْجِيلِ وَالْفُرْقَانِ، أَعُوذُ بِكَ مِنْ شَرِّ كُلِّ شَيْءٍ أَنْتَ آخِذٌ بِنَاصِيَتِهِ، اللَّهُمَّ أَنْتَ الْأَوَّلُ فَلَيْسَ قَبْلَكَ شَيْءٌ، وَأَنْتَ الْآخِرُ فَلَيْسَ بَعْدَكَ شَيْءٌ، وَأَنْتَ الظَّاهِرُ فَلَيْسَ فَوْقَكَ شَيْءٌ، وَأَنْتَ الْبَاطِنُ فَلَيْسَ دُونَكَ شَيْءٌ، اقْضِ عَنَّا الدَّيْنَ، وَأَغْنِنَا مِنَ الْفَقْرِ»

*அல்லாஹும்ம ரப்பஸ் ஸமாவாதி வரப்பல் அர்ழி, வரப்பல் அர்ஷில்*

அளீம், ரப்பனா வரப்ப குல்லி ஷையின், ஃபாலிகல் ஹப்பி வன்னவா, வமுன்ஸிலத் தவ்ராதி வல்இஞ்சீலிவல்ஃபுர்கான், அஊது பிக மின் ஷர்ரி குல்லி ஷையின் அந்த ஆஃகிதுன் பினாஸியதிஹி, அல்லாஹும்ம அன்தல் அவ்வலு ஃபலைஸ கப்லக ஷைவுன், வஅன்தல் ஆஃகிரு ஃபலைஸ பஃதக ஷைவுன், வஅன்தள் ளாஹிரு ஃபலைஸ ஃபவ்கக ஷைவுன், வஅன்தல் பாத்தினு ஃபலைஸ தூனக ஷைவுன், இக்ளி அன்னத்தைன, வஅஃக்னினா மினல் ஃபக்ரி

அல்லாஹ்வே... ஏழு வானங்களின்

இறைவனே! பூமியின் இறைவனே! மகத்தான அர்ஷின் இறைவனே! எங்கள் இறைவனே! சகல விடயங்களின் இறைவனே! வித்துகளையும், விதைகளையும் பிளப்பவனே! தவ்ராத், இன்ஜீல், ஃபுர்கானை இறக்கியவனே! அனைத்துப் விடயங்களின் கெடுதியை விட்டு நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். நீயே அவை அனைத்தின் நெற்றி முடியைப் பிடித்திருக்கின்றாய்! அல்லாஹ்வே நீயே முதலாமானவன்! உனக்கு முன் எதுவும் இல்லை; நீயே பிந்தியவன்! உனக்கு பின் எதுவும் இல்லை;

நீயே வெளிப்படையானவன்! உனக்கு மேல் எதுவும் இல்லை; நீயே மறைவானவன்! உனக்கு மறைவானது எதுவும் இல்லை; எங்கள் சார்பாக (எங்கள்) கடனை நிறைவேற்றிவிடு! எங்களை வறுமையை விட்டும் (பாதுகாத்துச்) செல்வந்தர்களாக்கி வை!



«اللَّهُمَّ إِنِّي أُشْهِدُكَ وَأُشْهِدُ مَلَائِكَتَكَ وَحَمَلَةَ عَرْشِكَ، وَأُشْهِدُ مَنْ فِي السَّمَاوَاتِ وَمَنْ فِي الْأَرْضِ، أَنَّكَ أَنْتَ اللهُ لَا إِلَهَ إِلَّا أَنْتَ وَحْدَكَ لَا شَرِيكَ لَكَ، وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُكَ وَرَسُولُكَ»

அல்லாஹும்ம இன்னீ உஷ்ஹிதுக, வஉஷ்ஹிது மலாஇகதிக வஹமலத அர்ஷிக, அஉஷ்ஹிது மன் ஃபிஸ் ஸமாவாதி வமன் ஃபில் அர்ழி, அன்னக அன்தல்லாஹு லா இலாஹ இல்லா அன்த வஹ்தக லா ஷரீக லக, வஅஷ்ஹது அன்ன

## முஹம்மதன் அப்துக வரஸூலுக.

அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னை சாட்சியாக்குகிறேன். மேலும், உன் வானவர்களையும், உன் அர்ஷை சுமந்திருக்கும் வானவர்களையும் சாட்சியாக்குகிறேன். வானத்திலிருப்பவர்களையும், பூமியில் இருப்பவர்களையும் சாட்சியாக்குகிறேன். நிச்சயமாக நீதான் அல்லாஹ்; உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை; நீ தனித்தவன்; உனக்கு இணை துணை இல்லை; நிச்சயமாக முஹம்மது உனது அடிமையும் உனது தூதரும் ஆவார்கள் என்றும் நான் சாட்சி கூறுகிறேன்.



«اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ بِأَنِّي أَشْهَدُ أَنَّكَ أَنْتَ اللهُ لاَ إِلَهَ إِلَّا أَنْتَ الأَحَدُ الصَّمَدُ، الَّذِي لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ»

அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக பிஅன்னீ அஷ்ஹது அன்னக அல்லாஹு லா இலாஹ இல்லா அந்த அல்அஹதுஸ் ஸமது அல்லதீ லம் யலித் வலம் யூலத் வலம் யகுன் லஹு குஃபுவன் அஹத்.

இறைவா! நிச்சயமாக நீதான் அல்லாஹ், உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை, நீ

தனித்தவன், தேவையற்றவன், நீ யாரையும் பெறவுமில்லை, யாராலும் பெறப்படவும் இல்லை, உனக்கு நிகராக எவரும் இல்லை என சாட்சி கூறியவனாக எனது தேவைகளை உன்னிடம் கேட்கிறேன்.

மேற்கூறப்பட்ட துஆ அல்லாஹ்வின் மகத்துவமான பெயர் என்றும் அதைக் கொண்டு பிரார்த்தித்தால் ஏற்றுக்கொள்ளப்படும் எனவும், அதைக் கொண்டு தேவைகளைக் கேட்டால் வழங்கப்படும் எனவும் ஹதீஸ்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.



«لَا إِلَهَ إِلَّا اللهُ الْعَظِيمُ الْحَلِيمُ، لَا إِلَهَ إِلَّا اللهُ رَبُّ الْعَرْشِ الْعَظِيمِ، لَا إِلَهَ إِلَّا اللهُ رَبُّ السَّمَاوَاتِ وَرَبُّ الْأَرْضِ وَرَبُّ الْعَرْشِ الْكَرِيمِ»

*லா இலாஹ இல்லல்லாஹுல் அழீமுல் ஹலீம். லா இலாஹ இல்லல்லாஹு ரப்புல் அர்ஷில் அழீம், லாஇலாஹ இல்லல்லாஹு ரப்புஸ் ஸமாவாத்தி வரப்புல் அர்ழி வ ரப்புல் அர்ஷில் கரீம்.*

கண்ணியம் வாய்ந்தோனும் பொறுமைமிக்கோனுமாகிய

அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் யாரும் இல்லை. மாபெரும் அரியணையின் அதிபதியான அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் யாரும் இல்லை . வானங்கள் மற்றும் பூமியின் அதிபதியும் கண்ணியமிக்க அரியணையின் அதிபதியுமான அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் யாரும் இல்லை.

இது கஷ்டங்கள், கவலைகளின் போது ஓதும் துஆவாகும்




«اللهُ، اللهُ رَبِّي لَا أُشْرِكُ بِهِ شَيْئًا»

அல்லாஹு அல்லாஹு ரப்பீ, லா உஷ்ரிகு பிஹி ஷைஆ

அல்லாஹ், அல்லாஹ்வே எனது இரட்சகன். எதையும் அவனுக்கு இணையாக்க மாட்டேன்.

இது கஷ்டங்கள், கவலைகளின் போது ஓதும் துஆவாகும்




«لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ، اللهُ أَكْبَرُ كَبِيرًا، وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيرًا، سُبْحَانَ اللهِ رَبِّ الْعَالَمِينَ، لَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ الْعَزِيزِ الْحَكِيمِ»

லாயிலாஹ இல்லல்லாஹு, வஹ்தஹு, லா ஷரீக்க லஹு,அல்லாஹு அக்பர் கபீரா, வல்ஹம்து லில்லாஹி கஸீரா, சுப்ஹானல்லாஹி ரப்பில் ஆலமீன், லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அஸீஸில் ஹகீம்

அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை. அல்லாஹ் மிகவும் பெரியவன். அவனைப் பெரியவன் எனப் பெருமைப்படுத்துகிறேன். அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது என அதிகமாகப் புகழுகிறேன். அனைத்துலகின் அதிபதியான அல்லாஹ் (அனைத்துக் குறைபாடுகளிலிருந்தும்) தூய்மையானவன். மிகைத்தவனும் ஞானமுடையவனுமான அல்லாஹ்வின் உதவியின்றி யுக்தியுமில்லை; சக்தியுமில்லை.



«لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ، لَهُ الْمُلْكُ، وَلَهُ الْحَمْدُ، وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ، سُبْحَانَ اللهِ، وَالْحَمْدُ لِلَّهِ، وَلَا إِلَهَ إِلَّا اللهُ، وَاللهُ أَكْبَرُ، وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ الْعَلِيِّ الْعَظِيمِ»

*லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷைஇன் கதீர். ஸுப்ஹானல்லாஹ், வல்ஹம்து லில்லாஹ், வலாஇலாஹ இல்லல்லாஹ்,*

வல்லாஹு அக்பர், வலா ஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹில் அலிய்யில் அழீம்.

அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை. ஆட்சி அதிகாரம் அவனுக்கே சொந்தமானது. புகழ் அனைத்தும் அவனுக்கே உரித்தானது. அவன் அனைத்தின் மீதும் சக்தி பெற்றவனாக உள்ளான். அல்லாஹ் மிகவும் தூய்மையானவன். புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரித்தானது. அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை.

அல்லாஹ் மிகப் பெரியவன். உயரிய மகத்தான அல்லாஹ்வின் உதவியின்றி யுக்தியுமில்லை; சக்தியுமில்லை.



«لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ، أَنْجَزَ وَعْدَهُ، وَنَصَرَ عَبْدَهُ، وَهَزَمَ الْأَحْزَابَ وَحْدَهُ»

லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, அன்ஜஸ வஅதஹு, வ நஸர அப்தஹு. வ ஹஸமல் அஹ்ஸாப வஹ்தஹ்

அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவன் தனது வாக்குறுதியை நிறைவேற்றித் தந்தான். தன் அடியாருக்கு உதவி செய்துவிட்டான். தன்னந்தனியாக கூட்டணிக்குலங்கள்

# அனைத்தையும் தோற்கடித்துவிட்டான்



«اللَّهُمَّ أَنْتَ رَبِّي لاَ إِلَهَ إِلَّا أَنْتَ، خَلَقْتَنِي وَأَنَا عَبْدُكَ، وَأَنَا عَلَى عَهْدِكَ وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ، أَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ، أَبُوءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ، وَأَبُوءُ لَكَ بِذَنْبِي فَاغْفِرْ لِي، فَإِنَّهُ لاَ يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ»

*அல்லாஹும்ம! அன்த்த ரப்பீ. லா இலாஹ இல்லா அன்த்த. கலக்த்தனீ. வ அன அப்துக்க. வ அன அலா அஹ்திக்க, வ வஅதிக்க*

மஸ்ததஅத்து. அஊது பிக்க மின் ஷர்ரி மா ஸனஅத்து. அபூஉ லக்க பி நிஃமதிக அலய்ய, வ அபூஉ லக்க பி தன்பீ. ஃபஃக்பிர்லீ. ஃபஇன்னஹு லா யஃக்பிருத் துனூப இல்லா அன்த்த.

அல்லாஹ்! நீயே என் அதிபதி. உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. நீயே என்னைப் படைத்தாய். நான் உன் அடிமை. நான் உனக்குச் செய்து கொடுத்த உறுதிமொழியையும் வாக்குறுதியையும் என்னால் இயன்ற வரை நிறைவேற்றியுள்ளேன். நான் செய்த வற்றின்

தீமைகளிலிருந்து உன்னிடம் நான் பாதுகாப்புக் தேடுகிறேன். நீ எனக்கு அருட்கொடைகளை வழங்கியுள்ளாய் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். மேலும், நான் பாவங்கள் புரிந்துள்ளதையும் உன்னிடம் (மறைக்காமல்) ஒப்புக்கொள்கிறேன். ஆகவே, என்னை மன்னிப்பாயாக! ஏனெனில், பாவத்தை மன்னிப்பவன் உன்னைத் தவிர வேறெவரும் இல்லை.



«اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ بِأَنَّ لَكَ الْحَمْدُ، لَا إِلَهَ إِلَّا أَنْتَ الْمَنَّانُ، بَدِيعُ السَّمَوَاتِ وَالْأَرْضِ، يَا ذَا الْجَلَالِ وَالْإِكْرَامِ، يَا حَيُّ يَا قَيُّومُ»

*அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக பிஅன்ன லகல் ஹம்து, லாஇலாஹ இல்லா அன்தல் மன்னான், பதீஉஸ் ஸமாவாதி வல்அர்ழ், யாதல் ஜலாலி வல்இக்ராம், யா ஹய்யு யா கய்யூம்.*

இறைவா! உனது புகழைக் கொண்டு உன்னிடத்தில் கேட்கிறேன், கொடையாளனாகிய உன்னைத் தவிர வேறு இறைவன்

இல்லை, வானங்களையும், பூமியையும் உருவாக்கியவன், மகத்துவமும், கண்ணியமும் பொருந்தியவனே! என்றும் உயிரோடு இருப்பவனே! என்றும் நிலையானவனே!

மேற்கூறப்பட்ட துஆ அல்லாஹ்வின் மகத்துவமான பெயர் என்றும் அதைக் கொண்டு பிரார்த்தித்தால் ஏற்றுக்கொள்ளப்படும் எனவும், அதைக் கொண்டு தேவைகளைக் கேட்டால் வழங்கப்படும் எனவும் ஹதீஸ்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

 **அல்லாஹ்வை புகழும் சில முறைகள்** 




«سُبْحَانَكَ مَا أَعْظَمَكَ رَبَّنَا»

*ஸுப்ஹானக மா அஃழமக ரப்பனா.*

*நீ தூய்மையானவன், இறைவா! உனது பிரம்மாண்டம் தான் என்ன!!*



«سُبْحَانَ ذِي الْجَبَرُوتِ وَالْمَلَكُوتِ وَالْكِبْرِيَاءِ وَالْعَظَمَةِ»

ஸுப்ஹான தில் ஜபரூதி வல் மலகூத்தி வல் கிப்ரியாஇ வல் அழமஹ்

அடக்கியாள்தல், அரசாட்சி, பெருமை, மகத்துவம் போன்றவற்றுக்குச் சொந்தக்காரன் தூய்மையானவன்.



«اللهُ أَكْبَرُ اللهُ أَكْبَرُ اللهُ أَكْبَرُ ذُو الْمَلَكُوتِ وَالْجَبَرُوتِ وَالْكِبْرِيَاءِ وَالْعَظَمَةِ»

அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பரு துல் மலகூத்தி வல் ஜபரூத்தி வல் கிப்ரியாஇ வல் அழமதி.

அரசாட்சி, அடக்கியாள்தல், பெருமை, மகத்துவன் போன்றவற்றுக்குச் சொந்தக்காரன் மிகப் பெரியவன், மிகப் பெரியவன், மிகப் பெரியவன்.



«اللهُ أَكْبَرُ كَبِيرًا، وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيرًا، وَسُبْحَانَ اللهِ بُكْرَةً وَأَصِيلًا»

*அல்லாஹு அக்பர் கபீரா, வல்ஹம்து லில்லாஹி கஸீரா, வ சுப்ஹானல்லாஹி புக்ரத்தவ் வ அஸீலா*

அல்லாஹ் மிகப் பெரியவன் என்று பெருமைப்படுத்துகிறேன். எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது என்று அதிகமாகப் போற்றுகிறேன். அல்லாஹ் பரிசுத்தமானவன் என்று காலையிலும் மாலையிலும் அவனைத் துதிக்கிறேன்.

## அல்லாஹ்வைப் புகழ்ந்து விட்டு, பின்வருமாறு நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்துச் சொல்வது விரும்பத்தக்க ஒன்றாகும்.

«اللَّهُمَّ صَلِّ وَسَلّم عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ، كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهِيمَ، وَعَلَى آلِ إِبْرَاهِيمَ، إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ»

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின், வ அலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத்த அலா இப்றாஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத். அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வ அலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த்த

## அலா இப்றாஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத்

இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்களுடைய குடும்பத்தாருக்கு நீ கருணை புரிந்ததைப் போன்று முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் அவர்கள் தம் குடும்பத்தாருக்கும் கருணை புரிந்திடுவாயாக! நீயே புகழுக்குரியவனும் கண்ணியமிக்கவனும் ஆவாய். இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்களுடைய குடும்பத்தாருக்கு நீ வளத்தை வழங்கியதைப் போன்று முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும்

அவர்கள்தம் குடும்பத்தாருக்கும் வளம் வழங்கிடுவாயாக! நீயே புகழுக்குரியவனும் கண்ணியமிக்கவனும் ஆவாய்








﴿حَسْبِيَ ٱللَّهُ لَآ إِلَٰهَ إِلَّا هُوَۖ عَلَيْهِ
تَوَكَّلْتُۖ وَهُوَ رَبُّ ٱلْعَرْشِ ٱلْعَظِيمِ ١٢٩﴾

[التوبة:٩٢١]

*எனக்கு அல்லாஹ்வே போதுமானவன். (வழிபடுவதற்குரிய) நாயன் அவனையன்றி (வேறுயாரும்) இல்லை; அவன் மீதே நான் பரிபூரண நம்பிக்கை கொண்டுள்ளேன் - அவன் தான் மகத்தான அரியாசனத்தின் (அர்ஷின்) அதிபதி. (அல்குர்ஆன் 09:129).*



﴿لَآ إِلَٰهَ إِلَّآ أَنتَ سُبۡحَٰنَكَ إِنِّي كُنتُ مِنَ ٱلظَّٰلِمِينَ ٨٧﴾ [الأنبياء:٨٧]

உன்னைத்தவிர வணக்கத்திற்குரிய நாயன் யாருமில்லை; நீ மிகவும் தூய்மையானவன்; நிச்சயமாக நான் அநியாயக்காரரர்களில் ஒருவனாகி விட்டேன். *(அல்குர்ஆன் 21:87).*



﴿رَبِّ ٱجۡعَلۡنِي مُقِيمَ ٱلصَّلَوٰةِ وَمِن ذُرِّيَّتِيۚ رَبَّنَا وَتَقَبَّلۡ دُعَآءِ ٤٠﴾ [إبراهيم: ٤٠]

*“என்) இறைவனே! தொழுகையை நிலை நிறுத்துவோராக என்னையும், என்னுடைய சந்ததியிலுள்ளோரையும் ஆக்குவாயாக! எங்கள் இறைவனே! என்னுடைய பிரார்த்தனையையும் ஏற்றுக் கொள்வாயாக. (அல்குர்ஆன் 14:40)*



﴿هُنَالِكَ دَعَا زَكَرِيَّا رَبَّهُۥۖ قَالَ رَبِّ هَبۡ لِى مِن لَّدُنكَ ذُرِّيَّةً طَيِّبَةًۖ إِنَّكَ سَمِيعُ ٱلدُّعَآءِ ٣٨﴾ [آل عمران:٨٣]

*இறைவனே! உன்னிடமிருந்து எனக்காக ஒரு பரிசுத்தமான சந்ததியைக் கொடுத்தருள்வாயாக! நிச்சயமாக நீ பிரார்த்தனையைச் செவிமடுத்தருள்வோனாக இருக்கின்றாய். (அல்குர்ஆன் 03:38)*



﴿رَبَّنَا ٱغۡفِرۡ لَنَا ذُنُوبَنَا وَإِسۡرَافَنَا فِيٓ أَمۡرِنَا وَثَبِّتۡ أَقۡدَامَنَا وَٱنصُرۡنَا عَلَى ٱلۡقَوۡمِ ٱلۡكَٰفِرِينَ ١٤٧﴾ [آل عمران:١٤٧]

எங்கள் இறைவனே! எங்கள் பாவங்களையும் எங்கள் காரியங்களில் நாங்கள் வரம்பு மீறிச் செய்தவற்றையும் மன்னித் தருள்வாயாக! எங்கள் பாதங்களை உறுதியாய் இருக்கச் செய்வாயாக! காஃபிர்களின் கூட்டத்தாருக்கு எதிராக எங்களுக்கு நீ உதவி புரிவாயாக. (அல்குர்ஆன் 03:147).




﴿رَّبِّ ٱغۡفِرۡ وَٱرۡحَمۡ وَأَنتَ خَيۡرُ ٱلرَّٰحِمِينَ ١١٨﴾ [المؤمنون:٨١١]

*என் இறைவனே! நீ என்னை மன்னித்துக் கிருபை செய்வாயாக! நீ தான் கிருபையாளர்களிலெல்லாம் மிக்க மேலானவன். (அல்குர்ஆன் 23:118).*




﴿رَبِّ إِنِّي ظَلَمْتُ نَفْسِي فَاغْفِرْ لِي﴾

[القصص:٦١]

*என் இறைவா! நிச்சயமாக நான் என் ஆத்மாவுக்கே அநியாயம் செய்து விட்டேன்; ஆகவே, நீ என்னை மன்னிப்பாயாக.*

*(அல்குர்ஆன் 28:16)*



﴿رَبَّنَآ أَفۡرِغۡ عَلَيۡنَا صَبۡرٗا وَثَبِّتۡ أَقۡدَامَنَا وَٱنصُرۡنَا عَلَى ٱلۡقَوۡمِ ٱلۡكَٰفِرِينَ ٢٥٠﴾

[البقرة:٢٥٠]

*எங்கள் இறைவா! எங்களுக்குப் பொறுமையைத் தந்தருள்வாயாக! எங்கள் பாதங்களை உறுதியாக்குவாயாக! காஃபிரான இம்மக்கள் மீது (நாங்கள் வெற்றியடைய) உதவி செய்வாயாக. (அல்குர்ஆன் 02:250).*

 அல்குர்ஆனிய துஆக்கள் 




﴿رَبَّنَا لَا تُزِغْ قُلُوبَنَا بَعْدَ إِذْ هَدَيْتَنَا وَهَبْ لَنَا مِن لَّدُنكَ رَحْمَةً ۚ إِنَّكَ أَنتَ ٱلْوَهَّابُ ﴿٨﴾﴾ [آل عمران:٨]

*எங்கள் இறைவனே! நீ எங்களுக்கு நேர் வழியைக் காட்டியபின் எங்கள் இதயங்களை (அதிலிருந்து) தவறுமாறு செய்து விடாதே! இன்னும் நீ உன் புறத்திலிருந்து எங்களுக்கு ((ரஹ்)மத் என்னும்) நல்லருளை அளிப்பாயாக! நிச்சயமாக நீயே பெருங் கொடையாளியாவாய். (அல்குர்ஆன் 03:08).*



10

﴿رَبِّ ٱشۡرَحۡ لِي صَدۡرِي ٢٥ وَيَسِّرۡ لِيٓ أَمۡرِي ٢٦﴾ [طه: ٢٥-٢٦]

இறைவனே! எனக்காக என் நெஞ்சத்தை நீ (உறுதிப்படுத்தி) விரிவாக்கி தருவாயாக! என் காரியத்தை எனக்கு நீ எளிதாக்கியும் வைப்பாயாக!. *(அல்குர்ஆன் 20:25-26).*




﴿مَسَّنِيَ ٱلضُّرُّ وَأَنتَ أَرۡحَمُ ٱلرَّٰحِمِينَ ٨٣﴾

[الأنبياء:٣٨]

*நிச்சயமாக என்னை (நோயினாலான) துன்பம் தீண்டியிருக்கிறது; (இறைவனே!) கிருபை செய்பவர்களிலெல்லாம் நீயே மிகக் கிருபை செய்பவனாக இருக்கின்றாய். (அல்குர்ஆன் 21:83)*




﴿رَّبِّ أَعُوذُ بِكَ مِنۡ هَمَزَٰتِ ٱلشَّيَٰطِينِ ٩٧
وَأَعُوذُ بِكَ رَبِّ أَن يَحۡضُرُونِ ٩٨﴾

[المؤمنون:٩٧-٩٨]

*என் இறைவனே! ஷைத்தானின் தூண்டுதல்களிலிருந்து நான் உன்னைக் கொண்டு காவல் தேடுகிறேன். இன்னும் அவை என்னிடம் நெருங்காமலிருக்கவும் என் இறைவனே! உன்னிடம் காவல் தேடுகிறேன். (அல்குர்ஆன் 23:97,98)*



﴿رَبَّنَا ٱصْرِفْ عَنَّا عَذَابَ جَهَنَّمَۖ إِنَّ عَذَابَهَا كَانَ غَرَامًا ﴾ [الفرقان:٦٥]

*எங்கள் இறைவனே! எங்களைவிட்டும் நரகத்தின் வேதனையைத் திருப்புவாயாக; நிச்சயமாக அதன் வேதனை நிரந்தரமானதாகும். (அல்குர்ஆன் 25:65)*




﴿وَسِعَ رَبُّنَا كُلَّ شَيۡءٍ عِلۡمًاۚ عَلَى ٱللَّهِ تَوَكَّلۡنَاۚ رَبَّنَا ٱفۡتَحۡ بَيۡنَنَا وَبَيۡنَ قَوۡمِنَا بِٱلۡحَقِّ وَأَنتَ خَيۡرُ ٱلۡفَٰتِحِينَ ٨٩﴾ [الأعراف:٩٨]

எங்கள் இறைவன் (தன்) ஞானத்தால் எல்லாப் பொருட்களையும் சூழ்ந்திருக்கின்றான் - அல்லாஹ்வின் மீதே நாங்கள் பரிபூரண நம்பிக்கை வைத்துள்ளோம், எங்கள் இறைவா! எங்களுக்கும், எங்கள் கூட்டத்தாருக்குமிடையே நியாயமான தீர்ப்பு

வழங்குவாயாக - தீர்ப்பளிப்பவர்களில் நீயே மிகவும் மேலானவன். (அல்குர்ஆன் 07:89)



15

﴿ٱرۡزُقۡنَا وَأَنتَ خَيۡرُ ٱلرَّٰزِقِينَ ١١٤﴾

[المائدة:١١٤]

எங்களுக்கு உணவுப் பொருட்களை அளிப்பாயாக; நீயே உணவளிப்பவர்களில் மேலானவனாக இருக்கிறாய். (அல்குர்ஆன் 05:114)



16

﴿رَبَّنَآ ءَاتِنَا مِن لَّدُنكَ رَحۡمَةٗ وَهَيِّئۡ لَنَا مِنۡ أَمۡرِنَا رَشَدٗا ١٠﴾ [الكهف:١٠]

*எங்கள் இறைவா! நீ உன்னிடமிருந்து எங்களுக்கு (ரஹ்)மத்தை அருள்வாயாக! இன்னும் நீ எங்களுக்கு எங்கள் காரியத்தை(ப் பலனுள்ள தாக)ச் சீர்திருத்தித் தருவாயாக. (அல்குர்ஆன் 18:10)*



﴿رَبِّ هَبۡ لِي حُكۡمٗا وَأَلۡحِقۡنِي بِٱلصَّٰلِحِينَ ٨٣﴾ [الشعراء:٣٨]

இறைவனே! நீ எனக்கு ஞானத்தை அளிப்பாயாக. மேலும், ஸாலிஹானவர்களுடன் (நல்லவர்களுடன்) என்னைச் சேர்த்து வைப்பாயாக.

*(அல்குர்ஆன் 26:83)*



﴿رَّبِّ زِدۡنِي عِلۡمٗا﴾ [طه:١١٤]

இறைவா! கல்வி ஞானத்தை எனக்கு அதிகப்படுத்துவாயாக. *(அல்குர்ஆன் 20:114)*



﴿رَبِّ إِنِّي لِمَآ أَنزَلۡتَ إِلَيَّ مِنۡ خَيۡرٖ فَقِيرٞ ٢٤﴾ [القصص:٢٤]

என் இறைவா! நீ எனக்கு இறக்கியருளும் நல்லவற்றின்பால் நிச்சயமாக நான் தேவையுள்ளவனாக இருக்கின்றேன். *(அல்குர்ஆன் 28:24)*

 அல்குர்ஆனிய துஆக்கள் 



﴿رَبَّنَا هَبْ لَنَا مِنْ أَزْوَٰجِنَا وَذُرِّيَّٰتِنَا
قُرَّةَ أَعْيُنٍ وَٱجْعَلْنَا لِلْمُتَّقِينَ إِمَامًا ٧٤﴾

[الفرقان:٧٤]

*எங்கள் இறைவா! எங்கள் மனைவியரிடமும், எங்கள் சந்ததியரிடமும் இருந்து எங்களுக்குக் கண்களின் குளிர்ச்சியை அளிப்பாயாக! இன்னும் பயபக்தியுடையவர்களுக்கு எங்களை இமாமாக (வழிகாட்டியாக) ஆக்கியருள்வாயாக!*

*(அல்குர்ஆன் 25:74)*



﴿رَبِّ أَوۡزِعۡنِيٓ أَنۡ أَشۡكُرَ نِعۡمَتَكَ ٱلَّتِيٓ أَنۡعَمۡتَ عَلَيَّ وَعَلَىٰ وَٰلِدَيَّ وَأَنۡ أَعۡمَلَ صَٰلِحٗا تَرۡضَىٰهُ وَأَدۡخِلۡنِي بِرَحۡمَتِكَ فِي عِبَادِكَ ٱلصَّٰلِحِينَ ١٩﴾ [النمل:١٩]

என் இறைவா! நீ என் மீதும், என் பெற்றோர் மீதும் புரிந்துள்ள உன் அருட்கொடைகளுக்காக, நான் நன்றி செலுத்தவும், நீ பொருந்திக் கொள்ளும் விதத்தில் நான் நன்மைகள் செய்யவும், எனக்கு அருள் செய்வாயாக! இன்னும் உம் கிருபையைக் கொண்டு என்னை

உன்னுடைய நல்லடியார்களில் சேர்த்தருள்வாயாக. *(அல்குர்ஆன் 27:19)*




﴿رَبَّنَا تَقَبَّلۡ مِنَّآۖ إِنَّكَ أَنتَ ٱلسَّمِيعُ ٱلۡعَلِيمُ ١٢٧﴾ ﴿وَتُبۡ عَلَيۡنَآۖ إِنَّكَ أَنتَ ٱلتَّوَّابُ ٱلرَّحِيمُ ١٢٨﴾ [البقرة:١٢٧-١٢٨]

எங்கள் இறைவனே! எங்களிடமிருந்து (இப்பணியை) ஏற்றுக் கொள்வாயாக; நிச்சயமாக நீயே (யாவற்றையும்) கேட்பவனாகவும் அறிபவனாகவும் இருக்கின்றாய்....

*எங்களை(க் கருணையுடன் நோக்கி எங்கள் பிழைகளை) மன்னிப்பாயாக; நிச்சயமாக நீயே மிக்க மன்னிப்போனும், அளவிலா அன்புடையோனாகவும் இருக்கின்றாய். (அல்குர்ஆன் 02:127, 128)*



«اللَّهُمَّ بَاعِدْ بَيْنِي وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَ بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ، اللَّهُمَّ نَقِّنِي مِنْ خَطَايَايَ كَمَا يُنَقَّى الثَّوْبُ الْأَبْيَضُ مِنَ الدَّنَسِ، اللَّهُمَّ اغْسِلْنِي مِنْ خَطَايَايَ بِالثَّلْجِ وَالْمَاءِ وَالْبَرَدِ»

*அல்லாஹும்ம பாஇத் பைனீ வபைன ஹதாயாய கமா பாஅத்த பைனல் மஷ்ரிகி வல் மஃரிபி, அல்லாஹும்ம நக்கினீ மின் ஹதாயாய கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யழு மினத் தனஸ், அல்லாஹும்மஃஸில்னீ மின்*

# ஹதாயாய பிஸ்ஸல்ஜி வல்மாஇ வல்பர்த்

அல்லாஹ்வே... கிழக்குக்கும் மேற்குக்குமிடையேநீஏற்படுத்திய தூரத்தைப்போல் எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ தூரத்தை ஏற்படுத்து! அல்லாஹ்வே... வெண்மையான ஆடை அழுக்கை விட்டு தூய்மையாக்கப்படுவது போல் என் தவறுகளை விட்டு என்னை நீ தூய்மையாக்கு! தண்ணீராலும் பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என் தவறுகளை நீ கழுவு!

இது தொழுகையின் ஆரம்பத்தில் ஓதும் துஆ



«اللَّهُمَّ رَبَّ جَبْرَائِيلَ، وَمِيكَائِيلَ، وَإِسْرَافِيلَ، فَاطِرَ السَّمَاوَاتِ وَالْأَرْضِ، عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ، أَنْتَ تَحْكُمُ بَيْنَ عِبَادِكَ فِيمَا كَانُوا فِيهِ يَخْتَلِفُونَ، اهْدِنِي لِمَا اخْتُلِفَ فِيهِ مِنَ الْحَقِّ بِإِذْنِكَ، إِنَّكَ تَهْدِي مَنْ تَشَاءُ إِلَى صِرَاطٍ مُسْتَقِيمٍ»

*அல்லாஹும்ம ரப்ப ஜிப்ராஈல, வமீகாஈல, வஇஸ்ராஃபீல, ஃபாதிரஸ்ஸமாவாதி வல்அர்ழ், ஆலிமல் ஃகைபி வஷ்ஷஹாதா, அன்த தஹ்குமு பைன இபாததிக ஃபீமா கானூ ஃபீஹி*

யஹ்தலிஃபூன், இஹ்தினீ லிமஹ்துலிஃப ஃபீஹி மினல் ஹக்கி பிஇத்னிக், இன்னக தஹ்தீ மன் தஷாஉ இலா ஸிராதின் முஸ்தகீம்

அல்லாஹ்வே... ஜிப்ரயீல், மீக்காயீல், இஸ்ராஃபீல் ஆகியோரின் இறைவனே! வானங்களையும் பூமியையும் படைத்தவனே! மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும் அறிந்தவனே! அடியார்கள் கருத்து வேற்றுமை கொண்ட விஷயத்தில் நீயே அவர்களுக்கு மத்தியில் தீர்ப்பளிப்பவனாக

இருக்கின்றாய்! கருத்து வேற்றுமை கொள்ளப்பட்ட உண்மைக்கு உனது அனுமதியைக் கொண்டு எனக்கு நீ வழிகாட்டு! நிச்சயமாக நீ நாடியவருக்கு நேரான வழியின் பக்கம் வழிகாட்டுகிறாய்

இதுவும் தொழுகையின், குறிப்பாக இரவுத் தொழுகையின் ஆரம்பத்தில் ஓதும் துஆவாகும். உள்ளத்தில் உண்மைக்குப் புறம்பான சந்தேகங்கள் ஏற்படும் போது இதை ஓதிக்கொள்ள வேண்டும்.



«وَجَّهْتُ وَجْهِيَ لِلَّذِي فَطَرَ السَّمَاوَاتِ وَالْأَرْضَ حَنِيفًا، وَمَا أَنَا مِنَ الْمُشْرِكِينَ، إِنَّ صَلَاتِي، وَنُسُكِي، وَمَحْيَايَ، وَمَمَاتِي لِلّٰهِ رَبِّ الْعَالَمِينَ، لَا شَرِيكَ لَهُ، وَبِذَلِكَ أُمِرْتُ وَأَنَا مِنَ الْمُسْلِمِينَ، اللَّهُمَّ أَنْتَ الْمَلِكُ لَا إِلَهَ إِلَّا أَنْتَ أَنْتَ رَبِّي، وَأَنَا عَبْدُكَ، ظَلَمْتُ نَفْسِي، وَاعْتَرَفْتُ بِذَنْبِي، فَاغْفِرْ لِي ذُنُوبِي جَمِيعًا، إِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ، وَاهْدِنِي لِأَحْسَنِ الْأَخْلَاقِ لَا يَهْدِي لِأَحْسَنِهَا إِلَّا أَنْتَ، وَاصْرِفْ عَنِّي سَيِّئَهَا لَا يَصْرِفُ عَنِّي سَيِّئَهَا إِلَّا أَنْتَ، لَبَّيْكَ وَسَعْدَيْكَ وَالْخَيْرُ كُلُّهُ فِي يَدَيْكَ، وَالشَّرُّ لَيْسَ إِلَيْكَ، أَنَا بِكَ وَإِلَيْكَ، تَبَارَكْتَ وَتَعَالَيْتَ، أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ»

வஜ்ஜஹ்து வஜ்ஹிய லில்லதீ ஃபதரஸ் ஸமாவாதி வல்அர்ள ஹனீஃபன் வமா அன மினல் முஷ்ரிகீன். இன்ன ஸலாதீ வநுசுகீ வமஹ்யாய வமமாதீ லில்லாஹி ரப்பில் ஆலமீன். லாஷரீகலஹூ வபிதாலிக உமிர்து வஅன மினல் முஸ்லிமீன். அல்லாஹும்ம அன்தல் மலிகு லாயிலாஹ இல்லா அன்த, வஅன அப்துக ளலம்து நஃப்ஸீ, வஃதரஃப்து பிதன்பீ ஃபஃக்பிர்லீ துனூபி ஜமீஆ, லாயஃக்ஃபிருத் துனூப இல்லா அன்த வஹ்தினீ லி அஹ்ஸனில் அக்லாகி லா யஹ்தீ லிஅஹ்ஸனிஹா இல்லா அன்த, வஸ்ரிஃப் அன்னீ

ஸய்யிஅஹா,லாயஸ்ரிஂஃபு அன்னீ ஸய்யிஅஹா இல்லா அன்த, லப்பைக வஸஂஃதைக வல்கைரு குல்லுஹூ ஃபீயதைக வஷ்ஷர்ரு லைஸ இலைக அன பிக வஇலைக தபாரக்த வதஆலைத அஸ்தஂஃபிருக, வஅதூபு இலைக.

வானங்களையும் பூமியையும் படைத்த (இறை)வனின் பக்கம் கலப்பற்றவனாக எனது முகத்தை நான் முன்னோக்கச் செய்துவிட்டேன். நான் இ ை ண ை வ ப் ப வ ர் க ளி ல் உள்ளவன் அல்ல! "நிச்சயமாக எனது தொழுகையும், எனது மற்ற வணக்க வழிபாடுகளும், நான்

வாழ்வதும், நான் மரணிப்பதும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ்விற்காகவே ஆகும். அவனுக்கு இணை துணை அறவே இல்லை. இப்படித்தான் எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. நான் அவனுக்குக் கீழ்ப்படியும் முஸ்லிம்களில் ஒருவனாவேன்.' அல்லாஹ்வே! நீதான் அரசன்; உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாருமில்லை; நீயே என் இறைவன்; நான் உனது அடிமை; நான் எனக்கு அநீதி இழைத்துக் கொண்டேன்; எனது குற்றத்தை ஒப்புக் கொண்டேன்; என் குற்றங்கள் அனைத்தையும் நீ மன்னித்துவிடு! நிச்சயமாக

உன்னைத் தவிர குற்றங்களை மன்னிப்பவர் வேறு யாருமில்லை. குணங்களில் மிகச் சிறந்ததற்கு நீ எனக்கு வழிகாட்டு. குணங்களில் மிகச் சிறந்ததற்கு உன்னைத்தவிர வேறு யாரும் வழிகாட்ட முடியாது. குணங்களில் தீயதை விட்டும் என்னைத் திருப்பிவிடு! குணங்களில் தீயதை உன்னைத்தவிர வேறு யாராலும் என்னை விட்டுத் திருப்ப முடியாது. உன் அழைப்புக்கு பதில் அளித்து விட்டேன்; உனக்குமுன் ஆஜராகி விட்டேன்; நன்மையெல்லாம் உனது இரு கரங்களிலேயே இருக்கிறது! தீமை உன்னைச் சார்ந்தது அல்ல; நான் உன்னைக்கொண்டே(வாழ்கிறேன்).

உன் பக்கமே (திரும்புகிறேன்). நீ மிக்க பரக்கத் உடையவன்; மிக உயர்ந்தவன்; உன்னிடம் மன்னிப்புக் கேட்கிறேன்; உன் பக்கமே மீளுகிறேன்.

இதுவும் தொழுகையின், குறிப்பாக இரவுத் தொழுகையின் ஆரம்பத்தில் ஓதும் துஆவாகும்.




«سُبْحَانَكَ اللَّهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ اللَّهُمَّ اغْفِرْ لِي»

ஸுப்ஹானகல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக அல்லாஹும்மஹ்ஃபிர்ழீ

அல்லாஹ்வே! உன்னைத் தூய்மைப்படுத்துகிறேன். இறைவனே! உன்னைப் புகழ்கிறேன். அல்லாஹ்வே! என்னை மன்னித்து விடு!

இந்த துஆவை ருகூவிலும், ஸுஜூதிலும் ஓதிக்கொள்ளலாம்.



«اللَّهُمَّ أَعُوذُ بِرِضَاكَ مِنْ سَخَطِكَ، وَبِمُعَافَاتِكَ مِنْ عُقُوبَتِكَ، وَأَعُوذُ بِكَ مِنْكَ لَا أُحْصِي ثَنَاءً عَلَيْكَ أَنْتَ كَمَا أَثْنَيْتَ عَلَى نَفْسِكَ»

அல்லாஹும்ம அஊது பிரிழாக மின் ஸஹதிக, வபிமுஆஃபாதிக மின் உகூபதிக, வஊது பிக மின்க லா உஹ்ஸீ ஸனாஅந் அலைக அன்த கமா அஸ்னைத்த அலா நஃப்ஸிக

அல்லாஹ்வே! உனது பொருத்தத்தைக் கொண்டு உன் கோபத்தை விட்டும் உனதுபாதுகாப்பைக் கொண்டு

உன் தண்டனையைவிட்டும் நான் பாதுகாவல் தேடுகிறேன். உன்னைக் கொண்டு உன்னை விட்டு பாதுகாவல் தேடுகிறேன். நான் உன்மீது புகழ்ந்து முடித்துவிட முடியாது. உன்னை நீ எப்படிப் புகழ்ந்து கொண்டாயோ அப்படியே நீ இருக்கின்றாய்.

இது ஸுஜூதில் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ اغْفِرْ لِي ذَنْبِي كُلَّهُ دِقَّهُ، وَجِلَّهُ، وَأَوَّلَهُ وَآخِرَهُ وَعَلَانِيَتَهُ وَسِرَّهُ»

அல்லாஹும்மஹ்ஃபிர்லீ தன்பீ குல்லஹு திக்கஹு வஜில்லஹு, வஅவ்வலஹு வஆஹிரஹு அலாநிய்யதஹு வஸிர்ரஹு

அல்லாஹ்வே... எனக்கு என்னுடைய குற்றங்கள் அனைத்தையும், அவற்றில் சிறியதையும், பெரியதையும், முந்தியதையும், பிந்தியதையும், வெளிப்படையானதையும், இரகசியமானதையும்

# மன்னித்துவிடு!

## இது ஸுஜூதில் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ اجْعَلْ لِي فِي قَلْبِي نُورًا، وَفِي لِسَانِي نُورًا، وَفِي سَمْعِي نُورًا، وَفِي بَصَرِي نُورًا، وَمِنْ فَوْقِي نُورًا، وَمِنْ تَحْتِي نُورًا، وَعَنْ يَمِينِي نُورًا، وَعَنْ شِمَالِي نُورًا، وَمِنْ بَيْنِ يَدَيَّ نُورًا، وَمِنْ خَلْفِي نُورًا، وَاجْعَلْ فِي نَفْسِي نُورًا، وَأَعْظِمْ لِي نُورًا»

*அல்லாஹும்மஜ்அல் லீ ஃபீ கல்பீ நூரன். வஃபீ லிசானீ நூரன். வஃபீ*

சம்ஈ நூரன். வஃபீ பஸரீ நூரன். வ மின் ஃபவ்க்கீ நூரன். வ மின் தஹ்த்தீ நூரன். வ அய் யமீனீ நூரன். வ அன் ஷிமாலீ நூரன். வ மிம் பைனி யதைய்ய நூரன். வ மின் கல்ஃபீ நூரன். வஜ்அல் ஃபீ நஃப்சீ நூரன். வ அஃழிம் லீ நூரா

இறைவா! என் இதயத்தில் எனக்கு ஒளியை ஏற்படுத்துவாயாக. என் நாவிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் செவியிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் பார்வையிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு மேலேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக.

எனக்குக் கீழேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு வலப் பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு இடப் பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு முன்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குப் பின்னாலும் ஒளியை ஏற்படுத்து வாயாக. என் மனத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு ஒளியை வலிமையாக்குவாயாக

இது குறிப்பாக இரவுத் தொழுகையின் ஸுஜூதில் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ عَذَابِ جَهَنَّمَ، وَمِنْ عَذَابِ الْقَبْرِ، وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ، وَمِنْ شَرِّ فِتْنَةِ الْمَسِيحِ الدَّجَّالِ»

*அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மின் அதாபி ஜஹன்னம வமின் அதாபில் கப்ர், வமின் ஃபித்னதில் மஹ்யா வல்மமாதி, வமின் ஷர்ரி ஃபித்னதில் மஸீஹத் தஜ்ஜால்*

அல்லாஹ்வே! உன்னிடம் "ஜஹன்னமு'டைய (நரக) வேதனையை விட்டும், "கப்ரு'டைய வேதனையை விட்டும், வாழ்வு மற்றும் மரணத்தின் குழப்பத்தை

விட்டும் "தஜ்ஜாலு'டைய குழப்பத்தால் விளையும் தீங்கை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன்.

இது கடைசி இருப்பில் ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓதும் துஆவாகும்




«اللَّهُمَّ أَعِنِّي عَلَى ذِكْرِكَ، وَشُكْرِكَ، وَحُسْنِ عِبَادَتِكَ»

அல்லாஹும்ம அஇன்னீ அலா திக்ரிக வஷுக்ரிக வஹுஸ்னி இபாததிக்

அல்லாஹ்வே... உன்னை நினைவு கூருவதற்கும், உனக்கு நன்றி செலுத்துவதற்கும், உன்னைஅழகிய முறையில் வணங்குவதற்கும் எனக்கு உதவி செய்!

இது கடைசி இருப்பில் ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ اغْفِرْ لِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ، وَمَا أَسْرَرْتُ وَمَا أَعْلَنْتُ، وَمَا أَسْرَفْتُ، وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي، أَنْتَ الْمُقَدِّمُ وَأَنْتَ الْمُؤَخِّرُ، لَا إِلَهَ إِلَّا أَنْتَ»

அல்லாஹும்மஃக்ஃபிர் லீ மா கத்தம்த்து வ மா அக்கர்த்து வ மா அஸ்ரர்து வ மா அஃலன்து வ மா அஸ்ரஃப்த்து வ மா அன்த அஃலமு பிஹி மின்னீ. அன்த்தல் முகத்திமு வ அன்த்தல் முஅக்கிரு லா இலாஹ இல்லா அன்த்த

அல்லாஹ்வே! நான் முந்திச் செய்த பிந்திச் செய்கிற, இரகசிமாகச்

செய்த, பகிரங்கமாகச் செய்த, வரம்பு மீறிச் செய்த, என்னைவிட நீ அறிந்துள்ள (இன்னபிற) பாவங்கள் அனைத்தையும் மன்னித்தருள்வாயாக! நீயே முன்னேறச் செய்பவன். பின்னடைவைத் தருபவன். உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை

இது கடைசி இருப்பில் ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْمَأْثَمِ، وَالْمَغْرَمِ»

அல்லாஹும்ம! இன்னீ அஊது பி(க்)க மினல் மஃஸமி வல்மஃக்ரம்

இறைவா! பாவத்தி-ருந்தும் கடனி-ருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் தேடுகிறேன்

இது கடைசி இருப்பில் ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْجَنَّةَ، وَأَعُوذُ بِكَ مِنَ النَّارِ»

அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுகல் ஜன்னா, வஅஊது பிக மினன் நார்

அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னிடம் சொர்க்கத்தைக் கேட்கிறேன்; நரகத்தை விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்

இது கடைசி இருப்பில் ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ الْبُخْلِ وَأَعُوذُ بِكَ مِنْ الْجُبْنِ وَأَعُوذُ بِكَ أَنْ أُرَدَّ إِلَى أَرْذَلِ الْعُمُرِ وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الدُّنْيَا وَأَعُوذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ»

*அல்லாஹூம்ம இன்னீ அஊது பிக்க மினல் புக்லி, வ அஊது பிக்க மினல் ஜூப்னி, வ அஊது பிக்க மின் அன் நுறத்த இலா அர்தலில் உமுரி, வ அஊது பிக்க, மின் ஃபித்னத்தித் துன்யா, வ அதாபில் கப்றி.*

இறைவா! உன்னிடம் நான் க ஞ் ச த் த ன த் தி லி ரு ந் து

பாதுகாப்புக் தேடுகிறேன். உன்னிடம் நான் கோழைத் தனத்திலிருந்தும் பாதுகாப்புக் தேடுகிறேன். நாங்கள் தள்ளாடும் வயதுக்குத் தள்ளப்படுவதிலிருந்து உன்னிடம் நான் பாதுகாப்புக் தேடுகிறேன். இம்மையின் சோதனையிலிருந்தும் மண்ணறையின் வேதனையிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக்தேடுகிறேன்

இது கடைசி இருப்பில் ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ إِنِّي ظَلَمْتُ نَفْسِي ظُلْمًا كَثِيرًا وَلَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ، فَاغْفِرْ لِي مَغْفِرَةً مِنْ عِنْدِكَ، وَارْحَمْنِي إِنَّكَ أَنْتَ الْغَفُورُ الرَّحِيمُ»

*அல்லாஹும்ம இன்னீ ழலம்த்து நஃப்ஸீ ழுல்மன் கஸீரன். வலா யஃக்ஃபிருத் துனூப இல்லா அன்த்த. ஃபஃக்ஃபிர்லீ மஃக்பிரத்தம் மின் இந்திக்க வர்ஹம்னீ. இன்னக்க அன்த்தல் ஃகஃபூருர் ரஹீம்*

இறைவா! எனக்கு நானே அதிகமாக அநீதி

இழைத்துக்கொண்டேன். உன்னைத் தவிர வேறெவராலும் பாவங் களை மன்னிக்க முடியாது. எனவே, உன்னிடமிருந்து எனக்கு மன்னிப்பு வழங்குவாயாக! மேலும், எனக்குக் கருணை புரிவாயாக! நிச்சயமாக நீ மன்னிப்பவனும் கருணையாளனுமாவாய்

இது தொழுகையில் ஸுஜூதில் அல்லது கடைசி இருப்பில் ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ حَاسِبْنِي حِسَابًا يَسِيرًا»

அல்லாஹும்ம ஹாஸிப்னீ ஹிஸாபன் யஸீரா

இறைவா! என்னை இலகுவாக விசாரித்திடு!

இது தொழுகையில் ஸுஜூதில் அல்லது கடைசி இருப்பில் ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓதும் துஆவாகும்



«رَبِّ قِنِي عَذَابَكَ يَوْمَ تَبْعَثُ عِبَادَكَ»

ரப்பி கினீ அதாபக யவ்ம தப்அஸு இபாதக

இறைவா! உன் அடியார்களை எழுப்பும் நாளில் உன் வேதனையிலிருந்து என்னை பாதுகாத்திடு!

இது தொழுகையில் ஸுஜூதில் அல்லது கடைசி இருப்பில் ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓதும் துஆவாகும்



«اللَّهُمَّ رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً، وَفِي الآخِرَةِ حَسَنَةً، وَقِنَا عَذَابَ النَّارِ»

அல்லாஹூம்ம ரப்பனா ஆதினா ஃபித்துன்யா ஹஸனதன் வஃபில் ஆஹிரதி ஹஸனதன் வகினா அதாபன் நார்

அல்லாஹ்வே! எங்கள் இறைவா! எங்களுக்கு இந்த உலகிலும் நன்மையை அருள்வாயாக! மறு உலகிலும் நன்மையை அருள்வாயாக! மேலும், நரக நெருப்பின் வேதனையிலிருந்து எங்களை நீ காத்தருள்வாயாக



«اللَّهُمَّ اغْفِرْ لِي، وَارْحَمْنِي، وَاهْدِنِي،
وَعَافِنِي، وَارْزُقْنِي»

அல்லாஹும்ம ம்ஃக்ஃபிர்லீ வர்ஹம்னீ வஹ்தினீ வஆஃபினீ வர்ஸுக்னீ"

இறைவா! என்னை மன்னிப்பாயாக! எனக்குக் கருணை புரிவாயாக! எனக்கு ஆரோக்கியத்தை வழங்குவாயாக! எனக்கு வாழ்வாதாரத்தை அளிப்பாயாக!

இது இம்மை மறுமை நலவுகளை பெற்றுத் தரும் துஆவாகும்



«اَللّٰهُمَّ اكْفِنِيْ بِحَلاَلِكَ عَنْ حَرَامِكَ وَاَغْنِنِيْ بِفَضْلِكَ عَمَّنْ سِوَاكَ»

அல்லாஹும்மக் ஃபினீ பிஹலாலிக அன் ஹராமிக வ அஃக்னினீ பி ஃபள்லிக அம்மன் ஸிவாக்

யா அல்லாஹ்! உன்னுடைய ஹலாலைக் கொண்டு உன்னுடைய ஹராமை விட்டும் என்னை போதுமாக்கச் செய்வாயாக! உன்னுடைய பேரருளைக் கொண்டு உன்னல்லாத வரை விட்டும் என்னை தேவையற்றவனாக ஆக்குவாயாக!

## கடன் நிறைவேறுவதற்கான துஆ



«اللَّهُمَّ مُصَرِّفَ الْقُلُوبِ صَرِّفْ قُلُوبَنَا عَلَى طَاعَتِكَ» «يَا مُقَلِّبَ القُلُوبِ ثَبِّتْ قَلْبِي عَلَى دِينِكَ»

*(அல்லாஹும்ம முஸர்ரிஃபல் குலூபி ஸர்ரிஃப் குலூபனா அலா தாஅதிக்) (யா முகல்லிபல் குலூப் ஸப்பித் கல்பீ அலா தீனிக்)*

(உள்ளங்களை திருப்புபவனே, உன்னை வணங்குவதன் பக்கம் எமது உள்ளங்களை திருப்புவாயாக) (உள்ளங்களை புரட்டுபவனே எனது உள்ளத்தை

